Moulavi. A. Nazeer Ahamed

# தப்லீக் ஜமாத்தைப்பற்றி தமிழக மாமேதையின் தீர்ப்பு தலைசிறந்த நபிமொழிகளின் கருத்துக்கள்.

5B


தொகுப்பு :

சையத் இஸ்மத் பாஷா சக்காப்



DARUL ULOOM GAUSIYA,
EIDGAH MASJID,
RAILWAY COLONY,
THANJAVUR- 613 001,



அஹலே சுன்னத் வ ஜமா அத்,

1438, வரகப்பையர் சந்து, தெற்குவீதி,

தஞ்சாவூர்—613009


Scanned by CamScanner

*TABLEEG JAMAATH-I*
*PATRI MAMEDHIEN THIRPOO*
*SIRANDHA NABI MOLZHGAL IN*
*UYARNDHA KARUTHUKKAL*

FIRST EDITION — 1985

தொகுப்பாசிரியர் :
சையத் இஸ்மத் பாஷா சக்காப்
பெரிய தைக்கால்,
கிள்ளை – 608 102,
தமிழ்நாடு.

அச்சிட்டோர் : நாதன் அச்சகம், தஞ்சை.

Scanned by CamScanner

பிஸ்மிஹி தஆலா

# மதிப்புரை.

அன்புடையீர்! அஸ்ஸலாமு அலைக்கும், வரஹ்

இப்போது எங்கு பார்த்தாலும், ஜமா அத்தே இஸ்லாமி என்றும், தப்லீகு ஜமாஅத் என்றும், இப்படி இஸ்லாமிய கொள்கைக்கு மாறுபட்ட பல கூட்டங்கள் வெளியாகி நேரிய கொள்கையில் இருந்த மக்களை குழப்பி, மௌலூது ஓதுவது கூடாது, பாத்திஹா கூடாது, மீலாது நடத்தக்கூடாது, அவ்லியாக்களை ஜியாரத்து செய்யக்கூடாது என்றெல்லாம் பாமர மக்களிடையே பரப்பி அவர்களை வீணுக ஊர்ஊராக கூட்டிச் சென்று மக்களின் மனதில் வஹ்ஹாபியத்தின் விஷத்தை ஊட்டி விடுகின்றனர் நாங்கள் நன்மையை ஏவுகிறோம் தொழுகைக்கு அழைக்கிறோம் என்று சொல்லி ஒரே ஒரு கடமையை மட்டும் செய்வதாக சொல்லித்திரிகின்றனர் தப்லீக்வாலாக்கள். பாமர மக்கள் பலரின் தொழில், குடும்ப விஷயங்கள், தர்மங்கள் எல்லாம் கெடுத்து ஊர் சுற்ற வைத்து வஹ்ஹாபியாக மாற்றிவிடவேண்டும் என்பதே அவர்களின் முழு நோக்கமாகுமென்ற விஷயம் இந்த தீர்ப்பின் மூலமும் தெரிந்து கொள்வீர்கள். இத்தகைய கெட்ட கொள்கைகளை அவ்வப்போதுள்ள சுன்னத் வல்ஜமாஅத் உலமாக்கள் ஆரம்பத்திலிருந்து கண்டித்தும், புத்தக வாயிலாகவும் தடுத்தே வந்திருக்கிறார்கள். நாயகம் [ஸல்] அவர்களின் வழித்தோன்றல் கண்ணியத்திற்குரிய கிள்ளை ஹஜ்ரத் சையத் இஸ்மத் பாஷா ஸக்காப் ஹஜ்ரத் அவர்களும்-தப்லீகு ஜமாஅத் - மவ்தூதிய்யத்து முதலான கெட்ட கொள்கைகளை கண்டித்து பல வெளியீடுகள் தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளிப்படுத்திக் கொண்டே இருக்கின்றார்கள் அதில் இந்த பத்வா நூலும் மிகச்சிறப்பாக அமைந்துள்ளது.

அதில் மிகச்சிறந்த மாமேதை தென்னகத்தின் தாய் மதரசாவான வேலூர் பாக்கியாத்தின் முதல்வரும், பின்னர் காயல்பட்டணம் மஹ்லரத்துல் காதிரிய்யா அரபிக் காலேஜின் முதல்வராகவும் இருந்து மறைந்த மாமேதை என் ஆசிரிய தந்தையுமான அபூபக்கர் ஹஜ்ரத் கிப்லா அவர்களின் பத்வா தீர்ப்பையும் மிகச்சிறந்த சில ஹதீது ஷரீபுகளையும், இடம் பெறச் செய்துள்ளார்கள். இவைகளைப் படிப்பதினால் வழி கெட்ட இக்கூட்டங்களின் கொள்கை என்ன, எவ்வளவு மோசமானது என்று நன்கு புலப்படும் இவ்வெளியீடு எந்த லாபத்தையும் கருதியதல்ல தீனுக்குச் செய்யும் ஊழியமாகவே வெளியிட்டுள்ளார்கள். இதை படித்து தான் பலன் பெறுவதோடு மற்றவர்களையும் படிக்கச் செய்து மார்க்கத்துக்கு ஊழியம் செய்த நன்மையை பெற எத்தனிப்பீர்களாக.

மௌலவி K. N. நூஹ் முஹ்யித்தீன் (உலவி வ மஹ்லரீ)

உடன்குடி. நெல்லை மாவட்டம்.

Scanned by CamScanner

பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்.

# முன்னுரை.

நம் நாட்டில் சில இயக்கங்கள் தோன்றி. இஸ்லாத்திற்கு வேண்டியவையா, வேண்டாதவையா என்ற கருத்தில் பொதுவாக பொதுமக்களுக்கு இஸ்லாமிய ஞானம் தேவைக்கு ஏற்ப குறைவால் சிலர் அவற்றை நல்லதென்றும், சிலர் தீமை விளைவிக்கும் என்ற கருத்து வேறுபாடு உள்ளவர்களாக இருக்கின்றனர் இதற்குப் பரிகாரம் அறிவுள்ளவர்கள் மற்றும் மேதைகளின் தீர்ப்புதான் சரியான முடிவு. ஆகையால், இந்த சந்தர்ப்பத்தில் நாம், தமிழகத்தின் தலை சிறந்த அநேக மேதைகளுக்கு ஆசிரியராய் விளங்கி மிகுந்த மதிப்பும் நற்பெயர் பெற்ற காலம் சென்ற அபூபக்கர் ஹஜ்ரத்துடைய ஒரு தீர்ப்பு காயல் மாநகர். மாத சஞ்சிகை "ஹாஜ்ஜத்"தில் வெளி வந்த பிரசுரத்தை நன்றியுடன் இங்கு சமர்ப்பிக்கிறோம் இஸ்லாமிய சட்டம், மேதைகளின் தீர்ப்பு போன்றவற்றை அலசி ஆராய்ந்து தேடிக் கண்டெடுக்க, ஒவ்வொரு முஸ்லிமின் சுபாவம். அவ்வகையில் இதுவும் மிகப் பயனுடையதாக அமைந்துள்ளது. சுத்தமான மனதுடனும் சாந்தி குணத்துடனும் பார்வையிட்டு ஏற்றுக்கொள்ளவார்கள் என்று நம்புகிறோம். இது ஒரு தீனின் பணி. தீனை சிறப்புப்படுத்தும் நோக்கத்துடனேயே நாம் இதனை வெளியிட்டுள்ளோம்.

இதனால் தமிழக முஸ்லிம் பெருங்குடி மக்களின் ஒரு பெரும் பிரச்சனை நீங்கி தேவையில்லாத் திவிரவாத குணம் அடிபட்டு சிராதுல் முஸ்தகீம் என்னும் நிரந்தர 'ஹக்' என்னும் சத்திய சீரிய பாதையில் நடப்பார்கள் என அவ்லியாக்களின் பரக்கத் கொண்டு வேண்டுகிறோம்.

அதற்கு அடுத்து "தப்லீக் ஜமாஅத்" கொள்கை சரிதானா என்பதை விளங்கிக்கொள்ள நபி மொழிகள் அடங்கிய கட்டுரையும் தந்துள்ளோம். சிறப்பு வாய்ந்த நபி மொழியின் விபரமான விளக்கத்தால் உண்மை எது என்பதை புரிந்து கொள்வீர்கள். ரப்புல் ஆலமீன் நம் அனைவரையும் இரு லோகத்திலும் மகான் (அவ்லியா)களின் உன்னத கொடியின் நிழலில் இடம் தந்தருள் வாஞ்சுக! ஆமீன்.

கிள்ளை
15—4—85

— சையத் இஸ்மத் பாஷா சக்காப்

Scanned by CamScanner

## பிஸ்மில்லாஹ்

வேலூர் பாக்கியாத்துஸ்ஸாலிஹாத் அரபிக்கல்லூரியிலும். பின்னர் கேரள மாநிலம் பட்டிக்காடு ஜாமியா நூரிய்யா அரபிக் கல்லூரியிலும். பின் காயல்பட்டிணம் மஹ்லரத்துல் காதிரிய்யா அரபிக் கல்லூரியிலும் முதல்வராக பணியாற்றிய ஹஜரத் மௌலானா அபூபக்கர் (ரஹ்) அவர்களுடைய "பத்வா". (மார்க்க தீர்ப்பு) கட்டுரை கீழே தரப்பட்டுள்ளது. ஆழ்ந்த கருத்துள்ளவர்களும், முன்பின் ஆராய்ந்து சொல்பவருமாக இருந்தார்கள். ஆதலால் இது நம்மக்களுக்கு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தவும், உண்மை என்ன என்பது விளங்க வழிகாட்டியாகவும் அமையும் என்பது வெளிப்படையான கருத்து.

கேரள நாட்டின் கள்ளிக்கோட்டை சமஸ்தானம், கேரளா ஜம்யியத்துல் உலமா மார்க்கத்தீர்ப்புக் கமிட்டி உலமாக்கள் தப்லீக் தலைவர்கள் எழுதிய அனைத்து நூல்களையும் ஆராய்ந்து இவை நம் சுன்னத் வல் ஜமா அத் கொள்கைக்கு முரணானது என்ற முடிவுக்கு வந்துவிட்டபோதிலும், இது குறித்து அத் தப்லீக்களிடையே நேரடியாக விவாதித்து, தீர்ப்புக்கு வரலாமென முடிவு செய்து அதற்கென குழுவொன்றையும் அமைத்தனர். அக்குழு ஜாமியா நூரிய்யா அரபிக் கலா சாலையின் முதல்வர் அல்லாமா இ. கே. அபூபக்கர் ஆலிம் அவர்களுக்கும். இந்திய யூனியன் முஸ்லீம் லீகின் தலைவராக இருந்து சிறப்புற செயலாற்றி மறைந்த பெரியார் ஆலிப் ஜனாப் கண்ணியமிக்க காயிதே மில்லத் முஹம்மத் இஸ்மாயீல் சாஹிப் B A., அவர்களுக்கும் தப்லீக் ஜமா அத்தினரை விவாதத்திற்கு வரும்படி அழைப்பு விடுக்கவும்- விவாத அரங்கைக் கூட்டவும் முழு அதிகாரம் கொடுக்கப்பட்டது.

அதொற்கொப்ப அவர்களும் விவாதத்திற்கு அழைப்பு விடுத்தனர். ஆனால் குறிப்பிட்ட தேதியில் அவர்களில் யாரும் விவாதத்திற்கு முன் வராததால் மார்க்கத் தீர்ப்புக் குழுவினைச் சார்ந்த உலமாக்கள் முன்னர் செய்திருந்த ஆராய்ச்சி முடிவின்படி, "தப்லீக் இயக்கத்தை தோற்றுவித்த இல்யாசும், அவரது

குருமார்களும், அவரை அப்படியே பின்பற்றுபவரும் வழி கெட்டவர்கள், வழி கெடுப்பவர்கள்" என்ற தீர்ப்பை வெளியிட்டனர், அந்தத் தீர்ப்பு 29—8—1965 அன்று வெளிவந்தது.

இது போன்ற பத்வாக்கள் வடநாட்டிலுள்ள கான்பூர், நாச்பூர் போன்ற இடங்களிலிருந்தும் வெளிவந்தன, தென்னகத்து தாய் மதரஸாவாக விளங்கிய வேலூர் பாக்கியாத்துஸ்ஸாலிஹாத்தின் முதல்வராகவும், மார்க்கத் தீர்ப்பளிக்கும் முப்தியாகவும் இருந்து சுமார் 40 ஆண்டு காலம் நற்சேவை ஆற்றிய அல்லமா மர்ஹூம் ஷெய்க் ஆதம் ஹஜ்ரத் அவர்கள், அவர்களுக்குப்பின் பாக்கியாத்திலும், பின்னர் காயல்பட்டணம் மஹ்லரத்துல் காதிரிய்யா அரபிக் கல்லூரியிலும் சேவை புரிந்த மர்ஹூம் அல்லாமா முப்தி முகம்மது அபூபக்கர் ஆலிம் கிப்லா அவர்களும் "தப்லீக் இயக்கம் வழி கெட்டது" என்ற தீர்ப்பின் மூலம் நம்மவர்களுக்கு தெளிவாக விளங்கியுள்ளது. இவ்வாறு தப்லீக்கர்களின் முகமூடியை கிழிக்க பற்பல பத்வாக்கள்-மார்க்கத் தீர்ப்புகள் வெளிவந்துள்ளன.

ஹூஜ்ஜத் டிசம்பர் 1976

**" இறை நேசர்களின் " இலட்சியப்பயணமும் " இல்யாசி தப்லீகர்களின் ஊர் சுற்றலும்,**
**அல்லாமா அபூபக்கர் ஹஜ்ரத் கிப்லா (ரஹ்) அவர்கள் "**

பத்வா (மார்க்கத் தீர்ப்பு)

(1) பெருமானார் (ஸல்) அவர்களைப் பார்த்தவர்களுக்கு (தோழர்கள் ) ' ஸஹாபிகள்" என்ற பெரும்பதவிகள் இருந்தும் வெளியூர்களில் இஸ்லாத்தைத் தழுவியவர்கள் மதீனாவுக்கு வரவேண்டும் என்று அவர்கள் கட்டளையிடப்படவில்லை

தப்லீக் கட்சியினர் டில்லிக்குச் செல்ல வேண்டுமென ஆரம்ப நாள் முதலே ஹக்கைவிட புனிதமாக மதித்துத்தூண்டி வருவதையும் அநேக இடங்களில் வற்புறுத்துவதையும் கண்கூடாகக் காணலாம்,

Scanned by CamScanner

ஷரீ அத்தில் (இஸ்லாமிய சட்டமுறை) முஸ்லீம் ஆண்மீது பலவிதமான கடமைகள் இருக்கின்றன, அப்படி இருக்க ஒரு கடமைக்கு மிக முக்கியத்துவம் அளித்து மற்ற கடமைகளை விடுவதற்கு மார்க்கம் இடமளிக்கவில்லை. உதாரணமாக குடும்பத்தினர்க்கு உண்ண உணவும், உடுக்க உடையும் கொடுத்தல் கடமையாகும். தாய், தந்தையரைக் கவனிக்க ஆட்கள் இல்லாவிடில், அவர்களை கவனித்து காப்பாற்றுவதும் கடமையாகும். இக்கடமைகளை விட்டுவிட்டு சொற்ப முதல் வைத்து, சிறிய வியாபாரம் செய்யும் முஸ்லீம்களையும், சட்ட திட்டங்கள் மட்டும் தெரிந்த முஸ்லீம்களையும், ஓரளவு தெரியாதவர்களையும் ஊர் ஊராகக் கூப்பிட்டுச் சென்று அவர்களின் சிறிய தொழில்களை நாசப்படுத்துவதையும். பாஷை தெரியாத நாடுகளுக்கு· இவர்களால் பேசவும், பிரச்சாரம் புரியவும் இயலாத நாடுகளுக்கு கூப்பிட்டுச் சென்று பிரயாணம் செய்து வருவதையும் காண்கிறோம்.

(2) ஜிஹாதிற்குரிய வயதும், சக்தியும் இருந்தும், வயோதிக மாதா, பிதாவிற்கு பணிவிடை புரிவதற்கு, "ஜிஹாத்" (புனித போர்) எனும் பதத்தை உபயோகித்து, அப்பணியிலே ஈடுபட்டிருக்குமாறு பெருமானார் (ஸல்) அவர்கள் பணித்தார்கள். அதுவே ஜிஹாதைவிட முக்கியம் என்று காட்டி இருக்கிறார்கள்

(3) "விசுவாசிகள் யாவரும் அல்லாஹ்வையே நம்பவும்" (அல்குர்ஆன்) எனும் ஆயத்தை எடுத்துக்கொண்டு பொதுவாக, உன் மனைவி உடல்நலம்-குன்றியிருந்தால் என்ன ? அல்லாஹ் மீது உனக்கு நம்பிக்கை இல்லையா ? எனக்கூறி மக்கள் பல ஊர்களுக்கு நிர்பந்தமாக அழைத்துச் செல்வதை நாம் காண்கிறோம், இவ்விதம் நிர்பந்திப்பதும், கூப்பிடுவதும் தவறாகும் என மேற்கூறிய ஹதீது அறிவிக்கிறது.

(4) பெருமானார் (ஸல்) அவர்களை நேரில் கண்டவர்களுக்கு அனைத்து அவ்லியாக்கள் அக்தாபுகளைவிட மிகவும் உயரிய ஸஹாபி எனும் பதவி இருக்கிறது, இப்படி இருந்தும் மகான் உவைஸ்கறனீ (ரலி) தமது தாயாருக்குப் பணிபுரிவதில் ஈடுபட்டி

ருந்தார்கள். பெருமானார் (ஸல்) அவர்களை பார்க்க வரவில்லை இவ்விஷயத்தை நபி (ஸல்) அவர்கள் ஆதரித்து தங்களின் பிரதானமான ஸஹாபி உமர் (ரலி) அவர்களிடம் கூறி "அந்த மகானிடம் நீர் துஆச் செய்யுமாறு கூறும்" கூறிய விபரம் ஸஹிஹ் முஸ்லிமில் (ஹதீஸ் ஒரு கிரந்தத்தின் பெயர்) வருகிறது.

தப்லீக் கட்சியினர் ஆறு திட்டங்களைக் கொண்ட அடிப்படையில் வேலை செய்கிறார்கள், அவர்கள் செய்யும் முறையைத் தவிர மற்றுமுள்ள வேலைகள் தப்லீக் அல்ல என்றும் கூறுகிறார்கள், இது முற்றிலும் தவறு, முஅத்தின் பாங்கு சொல்வதும் மார்க்கப் பணியாகும், இமாமத் செய்வதும் மார்க்கக் கடமையாகும். குர்ஆன் விளக்கங்களை கற்றுக் கொடுத்தலும், நியாயமான முறையில் வியாபாரம் செய்தலும், மக்களில் ஏற்படும் விவாதங்களை தீர்த்துவைத்து "இணக்கம்" செய்வதும்மார்க்கப் பணியைச் சேர்ந்ததாகும். இதனுடைய ஆதாரங்களும், விளக்கங்களும் ஆயத் ஹதீதுகளில் மிக மிக அதிகமாக வந்திருக்கின்றன.

நபீமார்கள் எல்லோர்க்கும் பிறகு பெரிய (தரஜா) பதவியிலுள்ள ஹஜரத் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்கள், தங்களின் "கிலாபத்" (ஆட்சி) சமயத்தில் மதீனாவில் இருந்துகொண்டே தங்களுக்குப் பொறுப்பான விஷயங்களை நடத்திவந்தார்கள். இதேபோன்று ஹஜரத் உமர் (ரலி) ஹஜரத் உதுமான் (ரலி) ஹஜரத் அலி அவர்களும் தங்கள், தங்கள் இல்லத்தில் இருந்து கொண்டே தங்கள் பணிகளையும், தங்களால் இயன்ற மார்க்கப் பணிகளையும் புரிந்துகொண்டிருந்தார்கள். இவர்கள் கலீபாவாக ஆவதற்கு முன்புங்கூட வேறு வெளியூர்களுக்கு தற்காலத் தப்லீக் கூட்டத்தினரின் முறைப்படி சுற்றித்திரியவில்லை.

ரஸூல் (ஸல்) அவர்கள், தகுந்தவர் எல்லோரையும் பிரச்சாரத்துக்கு அனுப்பவில்லை. சிலரை மட்டும் அனுப்பியிருக்கிறார்கள். சிலமன்னர்களுக்கு தபாலும் அனுப்பியிருக்கிறார்கள் மிகவும் தகுதி உள்ளவர்களான நான்கு கலீபாக்கள் மற்றும்

ஆயிரக்கணக்கான ஹதீதுகள் பாடமுள்ள மகான் அபூஹுரைரா (ரலி) அவர்கள் மதீனாவிலேயே இருந்து வந்திருக்கிறார்கள். இமாம் மாலிக் (ரஹ்) அவர்கள் தன்னுடைய கல்வியைக் கற்றுக்கொடுப்பதில் மதீனாவிலேயே தங்கிவிட்டார்கள். அக்காலத்திய சக்ரவர்த்தி ஹாரூன் ரஷீத் பாதுஷா. இமாம் மாலிக் (ரஹ்) அவர்களை தன் தர்பாருக்கு வரும்படியாகவும், மார்க்கப் பணிபுரிய, வேண்டிய உதவிகள் புரிவதாகவும் அழைத்தார். அப்படி இருந்தும் இமாம் அவர்கள், "நான் மதீனாவை விட மாட்டேன், மதீனாவில் இருந்துகொண்டே தீனுடைய கல்வியை கற்றுக்கொடுப்பேன்," என கூறிவிட்டார்கள்.

ஒரு சில மகான்கள், உக்காஷா (ரலி) கொழும்பு செய்யது முஹம்மது ஹஜரத் போன்றோர் தப்லீகின் பூரணமான முறையைக்கொண்டு நாட்டைவிட்டு வெளியே சென்று துறவியாகி முழுக்க முழுக்க மார்க்கக் கடமைகளிலும் ஈடுபட்டுச் சென்றார்கள். இது தனிப்பட்ட ஒரு சில மகான்களின் காஜா முயீனுத்தீன் சிஷ்தி (ரஹ்) நத்ஹர் வலி தப்ரே ஆலம் பாதுஷா (ரஹ்) ஷாஹுல் ஹமீது நாகூர் (ரஹ்) போன்ற மகான்களின்முறை ஒரு உயரிய முறை ஆகும். இது எல்லோர்க்கும் பொருந்தாது சாத்தியமாகாது. மேற்கூறப்பட்ட சில மகான்களின் முறையை நாம் தவறு என்று கூறவோ, கண்டிக்கவோ முடியாது. அது அவர்களின் பிரியம், தன்மைகளைப் பொறுத்த விஷயமாகும்.

2) ஈமான் கொள்வதிலும், ரமலான் நோன்பு நோற்பதிலும் இன்னும் தொழுவதிலும் கூட விலக்கு உண்டு. ஈமான் கொள்வதில் பைத்தியக்காரர்களும், சிறுவர்களும் விலக்களிக்கப் படுகின்றனர். நோன்பு வைப்பதில் பிரயாணிகளுக்கும், வியாதியஸ்தர்களுக்கும் விலக்கு உண்டு. தொழுகையில் பெண்டிர்க்கு மாதந்தோறும் விலக்கு உண்டு. இப்படி எல்லோர்க்கும், எல்லா விஷயங்களிலும் விலக்கு உண்டு. ஷர்த்துக்களுடன் உண்டு. ஆனால் தப்லீக் விஷயத்தில் மட்டும் விலக்கு இல்லையே? அது ஏன் என்ற கேள்விக்கு இடமுண்டாக்கிய பின் கீழ்க்கண்டவாறு அழகிய முறையில் மேலும் எழுதுகிறார்கள்.

Scanned by CamScanner

மேற்கூறப்பட்ட விஷயங்களின் அடிப்படையில் தப்லீக் (முஸ்லிம் அல்லாரை எத்தி வைப்பது) என்பதற்கு யார் யார் கடமையானவர்கள், தகுதி வாய்ந்தவர்கள் என்பதும் எத்தி வைப்பதில் குறைந்த முறை, நிறைந்த முறை எப்படி என்பதும் அவசியமாகும். இந்தத் தப்லீகிலிருந்து விதி விலக்கானவர்கள் யார் என்பதும் தெளிவாக வேண்டும். பொதுவாக மார்க்க ரீதியிலும், உலக ரீதியிலும் பகுத்தறிவு ரீதியிலும் ஓர் அமலைச் (செயல்) செய்வதற்கு அதற்குரிய தகுதி வேண்டும். மார்க்கத்தை எத்தி வைப்பது ஒவ்வொரு முஸ்லீம்கள் மீதும் உலகத்தில் எல்லோர்க்கும் எத்திவைப்பது அசாத்தியமானது. தாய், தந்தை, தம் பிள்ளைகளை கண்டு கலிமா தொழுகை முதலிய ஒழுக்கத்தை கற்றுக்கொடுப்பது கடமை அதைப் போன்று சுற்றத்தார்களுக்கும், தம்மை அடுத்திருப்பவர்களுக்கும் சந்தர்ப்பத்திற்கு ஏற்ப அவர்களுக்குத் தகுதியான விஷயங்களைக் கூறுவதும், கடமை, பொதுவாக ஹராமான விஷயங்களைக் கண்டால் கையால் அல்லது நாவால், அல்லது உள்ளத்தால் தடுக்க வேண்டும், வெறுக்க வேண்டும்.

ஷரீஅத்தில் சில விஷயங்களையே போதிக்க வேண்டும். மற்ற விஷயங்களை போதிக்கக்கூடாது என்பதற்கு ஆதாரமில்லை ரசூல் (ஸல்) அவர்கள் சஹாபாக்கள் ஆங்காங்கு முஸ்லீம்களுக்கு சந்தர்ப்பத்திற்கு ஏற்ப ஏவல்களை எடுத்துரைக்கும் அன்னிய மதத்தினர்கள் இஷாஅத் செய்துமிருக்கிறார்கள் நேரிலும், தபால்மூலம் அதற்குத் தகுந்தவர்களை அனுப்பிவைத்திருக்கிறார்கள்.

உதாரணமாக திஹயத்துல் கல்பி (ரலி) அவர்களை மன்னர்களுக்குத் தபால் கொடுக்க அனுப்பிவைத்திருக்கிறார்கள் இவ்விடத்தில் ஒரு குறிப்பு; தற்கால தப்லீக் வாதிகள் முஸ்லீம்களுக்குத்தான் எத்தி வைக்க வேண்டும் அன்னியமதத்தினருக்கு எத்தி வைப்பது கடமையில்லை என்று வாதிக்கின்றனர். இதற்கு அவர்கள் வாயால் கூறுவதைத் தவிர குர்ஆன், ஹதீது மூலமாக தகுந்த ஆதாரமில்லை. நிச்சயமாக நாம் தோல்வியடைவோம்,

Scanned by CamScanner

நிலைஏற்பட்டிருந்தும்அன்னி
அல்லது வெட்கப்படுவோம் எனும் யர்களுக்கு தீனுடைய இஷாஅத் செய்ததும், ஷஹீது ஆனதும் குர்ஆன், ஹதீது முன்னோர்களான ஸஹாபாக்கள் தாபியீன் களின் (இரு நபியவர்களின் தோழர்களை கண்டவர்கள்) சரிதை களில் நிறைந்திருக்கின்றன. ஹிஜ்ரி முதல் நூற்றாண்டில் பிற் பகுதியிலுள்ள பெரும்பான்மையான மகான்கள்தான், நமக்கு "கியாமத்" நாள் வரை வழிகாட்டியாவார்கள். அவர்களின் செயல்முறைதான் நமக்கு முன்மாதிரியாகும்.

இப்னு அப்துல் வஹ்ஹாபு நஜ்தி தன்னுடைய கொள்கை யைத்தவிர மற்ற நான்கு மதுஹபுகளைச் சார்ந்தவர்களையும் முஷ்ரிக் காபிர் என்றெல்லாம் அவர் தம் கிரந்தங்களில் கூறி யுள்ளார்.

அந்த வஹ்ஹாபியாக்களின் கொள்கையை மறைமுகமாக பரப்ப கலிமா தொழுகை என்னும் அழகிய போர்வையைப் போர்த்துக்கொண்டு தப்லீக் கட்சியினர்தோன்றியிருக்கிறார்கள் இவர்களை தங்களல்லாத நான்கு மதஹபுகளை சார்ந்தவர் களும் முஷ்ரிக்குகளாக ஆகிவிட்டதால் அந்த நான்கு மதஹபு வினர்க்கும் கலிமா சொல்லிக் கொடுக்க வேண்டும். இவர்களை நாம் முதலில் இஸ்லாமாக்க வேண்டும் என்ற கெட்ட அகீதாக் களை வைத்துக்கொண்டு இவ்விதத் தோற்றத்தில் தோன்றி யிருக்கிறார்கள் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை.

ஒரு சில உலமாக்களும், பாமர மக்களும் இதைப் பார்த்து விட்டு உண்மையானவர்கள் என நம்பிவிடுகின்றனர். இப்படி நல்ல தோற்றத்தில் இயவர்கள் பிற்காலத்தில் வருவார்கள் என்று நாயகம் (ஸல்) அவர்கள் முன்னறிவிப்பாக கூறியிருக்கிறார்கள்.

சில கெட்ட கொள்கைகளை மறைமுகமாக வைத்துக் கொண்டு உங்களைவிட அதிகமாக தொழக்கூடியவர்களாக, நோன்பு நோற்கக்கூடியவர்களாக, குர்ஆன் ஓதக்கூடியவர்களாக இருந்தாலும்அவர்களின் தொண்டைக்குக்கீழ் ஈமான் இறங்காது என்பதாக ரஸூல் (ஸல்) அவர்கள் கூறியிருக்கிறார்கள்.

Scanned by CamScanner

தப்லீகர்கள் நம்மை அழைக்க வரும்போது, தப்லீக் புதிதாக உண்டாகியிருக்கிறதென்றும் அதன் ஸ்தாபகர், தான் கண்ட கனவிற்கு இணங்க நம்மை வசப்படுத்தி இருக்கிறார் அவர் கனவுக்கு ஒப்புக்கொள்ளுதல் நம்மீது கடமை இல்லை என்பதும் இஸ்லாம் தோன்றி 13 நூற்றாண்டிற்குப் பின் குர்ஆன் ஹதீது களுக்கு ஆதாரமற்ற முறையில் இந்த இயக்கம் தோன்றிஇருப்பதால் பித்அத் ஆகும் என்றும் பிறகு அவர் செயல்படும் முறைகளுக்கும், ஆதாரபூர்வமாக கண்டித்தால் இது எல்லாம் நீங்கள் மட்டுமசொல்லுகிறீர்கள். யாரும்இந்ததப்லீக் இயக்கத்தைகுறை கூறுவதில்லை. எல்லோரும் ஏற்றுக்கொண்டார்கள் என்று சொல்கிறார்கள். அவர் சொல்வது உண்மையா? அந்த இயக்கத்திலும் ஆதாரங்கள் உள்ளனவா? நாம் ஆதாரம் இல்லாமல் வேண்டும் என்று சொல்கிறோமா என்பதெல்லாம் மேல்கண்ட பத்வாவைப் பார்த்து விளங்கியிருப்பீர்கள். நாம் சதா தீனில் தானே இருக்கிறோம். நாம் அவர்களுடன் இந்த இயக்கத்தில் சேராவிட்டாலும் தீனுள்ளவர் தானே! அவ்வாறிருக்க அவர் இயக்கத்தில் நாம் சேரவில்லை என்று நம்மை வைஷத்தான், மார்க்கத்தின் விரோதி, என்றெல்லாம் திட்டுவதுமல்லாமல் ஸலாமும் விட்டுவிடுகிறார்கள். தப்லீகர்களுக்கு நாம் ஸலாம் செய்தாலும் பதில் தருவதில்லை. இது தற்பொழுதும் நடைமுறையில் உள்ளது. அவர் தாம் திருந்துவதற்கு பதிலாக நம்மை திட்டுவதினால் என்ன பயன்? அவர் எங்களை வைஷத்தான் என்கிறூர்கள் அருமை நாயகம் [ஸல்] அவர்கள் யாரை வைஷத்தான் என்று சொல்லுகிறார்கள் என்பதை நாம் கீழே தந்துள்ள ஹதீது கண்ணாடியில். பார்த்துக்கொள்ளுங்கள். புகாரி ஷரீபின் இரு ஹதீதுகளும் கொடுத்துள்ளோம். அதையும் பார்வையிட்டு நபி நாயகம் [ஸல்] அவர்களைத் தழுவி தொன்று தொட்டு வருகிற எங்களை, முஷ்ரிக், வைஷத்தான் என்று சொல்லியிருக்கிறார்களா? அல்லது வேறு எவரைப் பற்றி கூறியிருக்கிறார்கள் என்பதை நன்கு தெரிந்துகொள்ளுங்கள்.

Scanned by CamScanner

பெரியோர்களே! இவர்களுடைய இந்த இயக்கமும், நடமாட்டமும் முஸ்லீம் சமுதாயத்தில் ஒற்றுமை ஏற்படுத்துகிறதா? அல்லது அவர்கள் வேற்றுமையை உண்டாக்குகிறார்களா? மேலும் முஸ்லீம் சமுதாயத்தில் குழப்பம் ஏற்படுத்தி நாட்டையும் பாழாக்குகிறார்களல்லவா என்பதை சிந்தியுங்கள்.

மதிப்பிற்குரிய உலமாக்கள் அல்லாவிற்கு அஞ்சி தம் பணியை இதைக் கொண்டு முடித்துவிட்டார்கள். இனி அதன்படி நடப்பது நம் கடமை ஆகும். இன்னும் அறியாத சில தான் தப்லீகை நிறை கூறுகிறார்கள். மேதைகளும் சிறந்த ஆலிம்களும் அதை குறை கூறுவதில்லை என்றும், மேலும் தீனிலே இவ்வாறான உயர்ந்த சேவையை தடை செய்யக்கூடிய ஹதீதுகள் இருக்காது என்றெல்லாம் பலவிதமாக தப்லீகர்கள் கூறுகிறார்கள். இந்த பிரசுரத்தின் பிரகாரம் ஆலிம்களே மிக தெளிந்த முறையில் ஆதாரத்துடன் அந்த இயக்கமே சரியில்லை இஸ்லாத்திற்கு முரண்பட்டது என்பதையும் அதில் சேரவேண்டியதில்லை என்பதையும் வெட்ட வெளிச்சமாக காண்பித்துவிட்டார்கள். நாமும் ஹதீதுகள் மூலமாக தெளிவு படுத்தியுள்ளோம் அதில் அல்லாவுடைய திருத்தூதரே இதை போன்ற இயக்கத்தை முஸ்லீம்கள் ஏற்றுக்கொள்ளக்கூடாது என்பதை பற்பல நேரங்களில் பலவிதமாக சாதாரண அறிவுள்ளவனும் புரிந்துகொள்ளும் அளவு எடுத்துக்கூறியுள்ளார்கள். ரஸூல் நாயகம் [ஸல்] அவர்கள் கூறுவதெல்லாம் அல்லாவுடைய சொல்லே ஆகும். ஆதலால் அவற்றை ஏற்றுக் கொள்வது தான் இஸ்லாமாகும். அதைப் புறக்கணிப்பது இஸ்லாத்திற்கு நேர் மாற்றமான செயலாகும். தவிர தீனுக்காக நாம் இப்பணியை செய்துள்ளோம். இதை வாசிக்கும் கனவான்கள் நாம் இதை வாசிப்பதோடு மற்றவர்களுக்கும் படிக்க வைத்து ஒற்றுமைக்கும், அன்புக்கும் வழிசெய்வார்கள் என்றும், தேவையற்ற வீண் பிரயாண செலவுகள் செய்யலாகாது எச்சமயமும் குழப்பமும், பிளவும் ஏற்படுத்தக்கூடாது. முன்னாலிருந்ததுபோன்று அன்புடனும், ஒற்றுமையுடனும் இருக்குமாறு கேட்டுக்கொள்கின்றோம்.

Scanned by CamScanner

## மேலே குறிப்பிட்ட ஹதீதுகளில் முதலாவது.

1. நீங்கள் தம் மார்க்கத்தைப் பெற யாரிடத்தில் அமருகிறீர்களோ யாரிடத்தில் பெறப் போகிறீர்களோ அவர்களைப் பற்றி கவனமாக இருங்கள். ஏனெனில் கடைசி காலத்தில் [கியாமத் - உலகு முடியும் காலம்] சாத்தான் மனித ருபத்தில் தோன்றி, ஹதீதை சொல்லி பல விஷயங்களை கூறுவார்கள். தீன் [மார்க்கம்] சம்பந்தமாக எந்த மனிதரிடத்திலும் அமர நேரிட்டால் அவர் பெயர் என்ன? அவர் தந்தை பெயர் என்ன? எந்த குடும்பத்தின் எந்த வகையைச் சேர்ந்தவர்கள் என்பதை அலசி கொள்ளுங்கள் நீங்கள் அவ்வாறு செய்து கொள்ளாமல் அவர் சென்றுவிட்டால் அவர் எங்கோ உள்ளவர் என்பதையெல்லாம் அறிந்துகொள்ளாது தவறிவிடுவீர்கள்.

இதை ஹாகிம் என்பவர் தன் சரித்திர நூலில் எழுதியுள்ளார்.

மேலும் இப்னே மருத் [ரதி] வாயிலாக தைலமி கூறுகிறார். எவரையும் அவர் குணத்திலும், நோக்கத்திலும் நல்லவரா என்று தெரிந்துகொள்ளாமல் அவசரப்பட்டு எவரையும் தமக்கு ஆசிரியராக ஏற்றுக்கொள்ளக்கூடாது. ஏனெனில் உன் நற் கொள்கையை மாற்றவும் உன்னுடைய மார்க்கத்தைவிட்டு உன்னை அகற்றும் கெட்ட எண்ணத்துடனும், உனக்கு கற்றுக் கொடுக்க தந்திரமாக உன்னிடம் யாரும் நடிக்கலாம், ஆகையால் அவர் கருத்தையும் அறியாதபடி அவரை ஏற்றுக்கொள்ளக் கூடாது என்றே நபீ நாயகம் (ஸல்) அவர்கள் உத்திரவிட்டு வழிகாட்டியுள்ளார்கள். இதன்படி தப்லீகர்களுடைய எண்ணமும் அவர்களுடைய செயலும் நமக்கு நேர் மாற்றமாக இருக்கும் காரணத்தால் அவரை நாம் இந்த வழிகாட்டுதலின்படி நிராகரிப்பது அவசியமாகும்.

உதாரணமாக நாம் மௌலூதுக்கு நடத்தக்கூடியவர்கள் நபீகள் நாயகம் அவர்கள் அதைநடத்துவது தவறுஎன்கிறார்கள், நபீகள் நாயகம் [ஸல்] அவர்களுக்கு அல்லாவின் அருளால் தெரியாதது என்ன என்கிறோம். தப்லீக் ஜமாஅத்தின் பெரியோர்களின் கொள்கை

அதற்கு நேர் மாற்றமானது நாம் நம் வலிமார்களுக்கு தர்காக்கள் கட்டுகின்றோம். தர்கா கட்டுவது தவறு என்றும், ஆகாது என்றும் சொல்வதுடன் அவர்களுடைய பெரியவர்களுக்கும் தர்காவே இல்லை. மேலும் தர்காக்களை கேவலமாக நினைக்கிறார்கள். தென்னகத்திற்கு தாய் மதரஸாவான பாக்கியாத்துஸ்சாலிஹாத் ஸ்தாபகர் ஆலா ஹஜரத் [ரஹ்] அவர்களுக்கும் பள்ளிக்கும் மதரஸாவிற்கும்முன் தர்கா கட்டப்பட்டுள்ளது அடுத்த ஆலா ஹஜரத் அவர்கள் தர்கா கட்டிடத்திற்குள்ளேயே அடக்கம் செய்யப்பட்டிருக்கிறார்கள். இவ்வாறே நிறைய நமக்கும் அவருக்கும் ஈமான் விஷயத்திலும் நடைமுறை விஷயத்திலும் ஏகப்பட்ட வித்தியாசங்கள் இதெல்லாம் சுன்னத் ஐமாஅத் சங்கைமிகு ஆலிம்களின் கூட்டங்களில் பேசும் பிரசங்கத்தின் வாயிலாகவும் அவர்கள் வெளியிடும் நூல்களின் வாயிலாகவும் தெரிந்துகொண்டு உங்களுக்கு எந்த மார்க்கம் பிடிக்கிறதோ அவ்வழி செல்ல உங்கள் இஷ்டம்.

மேற்கண்ட ஹதீது மூலமாக நிறைய அறிந்திருப்பீர்கள். கீழ்கண்ட ஹதீதும் தப்லீக் போன்ற இயக்கங்களில் சேருவதைப் பற்றி என்ன கூறுகின்றது என்பதை கவனிப்போம்.

2 ஒருவர் பெருமானார் (ஸல்) அவர்களிடம் கியாமத் (உலகு முடியும் நாள்) நாளைப்பற்றி வினவினார். அமானித விஷயங்கள் புறக்கணிப்பட்டால் அந்நாள் விரைவில் நெருங்கும் எதிர்பாருங்கள் என்று பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அமானித விஷயங்கள் புறக்கணிப்படுவது என்றால் என்ன ? என்று மறுபடியும் அவர் கேட்டார். எப்பொழுது மார்க்க பொறுப்புகள் அதற்குதகுதியற்றவர்களிடம் ஒப்படைக்கப்பட்டதோ அப்பொழுது உலகு முடியும் தருணத்தை எதிர்பாருங்கள் என்று பெருமானார் (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள். (புகாரி ஷரீப்)

கல்லாதவர்கள், கற்றவர் (ஆலிம்) களிடத்தில் சென்று கற்பது வழக்கம். ஆனால், இந்த "டில்லி தப்லீக் இயக்கத்தின்" மூலம் கல்லாத சிலர் கூடி ஆலிம், பெரும் மேதை, முப்தி போன்றவர்களிடத்தில் அவர்களை கற்றுத்தர செல்கிறார்கள்

இதை கவனிக்கும்போது இந்த ஹதீதில் கூறப்பட்டதற்கொப்ப மார்க்க பொறுப்புகள் அதற்கு தகுதியற்றவர்களிடம்ஒப்படைக்கப்பட்டிருப்பது ருஜூவாகிவிட்டது. சாதாரணமானவர்கள் ஆலிம்களுக்கும், ஷெய்கு மார்களுக்கெல்லாம் வழி சொல்லி கொடுக்க மார்க்கம் கற்றுக் கொடுக்க வீடுவீடாக செல்கிறதைப் பார்க்கும்போது தகுதியற்றவர்களிடத்தில் மார்க்கப் பொறுப்பு ஒப்படைக்கப்பட்ட விஷயம் உண்மையே என்றாகிவிடுகிறதல்லவா தப்லீகர்கள் தாம் நல்ல வேலை செய்வதாக பேசுகிறார்கள், நாயகம் (ஸல்) அவர்கள் அந்த முறையும் தவறானது. அவர்களும், கெட்டவர்கள் என்று உறுதிபடுத்தி அந்த கெட்டமனிதர்கள் காலம் வந்தால் உலகம் முடியும் என்ற அடையாளமும் நமக்கு விளக்கியுள்ளார்கள்.

3 நீங்கள் சுலபமாக செய்யக்கூடிய உம்மத்துக்களாக (கூட்டமாக) படைக்கப்பட்டிருக்கிறீர்கள். ஆனால் கடினம் ஆக்குபவர்களாக கூட்டப்படவில்லை. (புகாரி ஷரீப்)

இஸ்லாத்தின் கடமைகள் நமக்கு தெளிவாக காண்பிக்கப் பட்டுவிட்டன. 14 நூற்றாண்டுகளாக அதன்படிதான் நடந்து வருகின்றோம். தற்போது டில்லி தப்லீக் கட்சி மூலமாக எக் காலும் இல்லாத பெரிய மேதாவிகள் இமாம்கள் ஷெய்கு மார் கள் எல்லாம் கூட நமக்கு காட்டாத, சொல்லித்தராத சில புதி தான விஷயங்கள் இந்த இயக்கத்தால் முஸ்லிம்களுக்கு கட்டா யப்படுத்தி அதன்படி நடந்தே தீரவேண்டும் என்று வற்புறுத்தி வருகிறார்கள். அதாவது (1) டில்லி செல்வது (2) சில்லா இருப்பது (40 நாட்கள்) (3) கஷ்து (சுற்றுதல்) செய்வது (4) ஹல்காயிருப்பது (வட்டமாக அமர்வது) போன்றவைகள் இதெல்லாம் எக்காலத்திலும் இருந்ததில்லை. எந்த முஸ்லிமும் அவ்வாறு செய்தே தீரவேண்டும் என்று வற்புறுத்தப்பட்டதும் கிடையாது இவற்றை நோக்குங்கால் முதலாவதாக இவை தீனில் சேர்ந்தவையல்ல. அடுத்ததாக இவையெல்லாம் சுலபமான காரியங்களுக்கு பதிலாக கடினமானவையே. சுலபமாகநடக்கவும் நடத்திவைப்பதுதான் நம்முடைய பொறுப்பு என்றும் அதிக

கஷ்டப்படக்கூடிய வேலைகளில் மற்றவர்களை அதிகமாக ஈடுபட வைக்கக்கூடாது என்று விளக்கி அவ்வாறு செய்யக் கூடாது என்று தடுத்துள்ளார்கள். மேலே குறிப்பிட்டதெல்லாம் சுலப வரிசையில் உள்ளவையல்ல என்றும், கடின வரிசையில் உள்ளவையே என்றும் 400 ஆண்டுகளுக்குப்பின் சொல்லப் பட்ட பித்அத்தே என்று விளங்குகிறது.

ஒரு தெருவில் அக்கம் பக்கம் வீட்டில் வசிக்கிறவர்களில் ஒருவர் தப்லீக் கூட்டத்தைச் சேர்ந்தவர், ஒருவர் மறுக்கிறவர். இருவர் போக்கும் மாறுபட்ட திசை நோக்கி உள்ளது. இருவர் மனதிலும் கசப்பு. முந்தினவர் தன் முந்திய நிலையைவிட்டு மாறி விட்டார். மற்றவர் மாறவில்லை. இருவரும் ஒரு தெருவில் பிறந்து கூடி விளையாடி வளர்ந்தவர்கள். தற்போது வேற்றுமையும் வெறுப்புணர்ச்சியும் ஏற்பட்டுவிட்டது. ஆழ்ந்த அறிவுடன் கவனிக்கும்போது இந்த வேற்றுமை யார் ஏற்படுத்தினார். எப்படி ஏற்பட்டது. தப்லீகில் சேர மறுக்கிறவர்கள் ஏற்படுத் தினார்களா அல்லது தப்லீகரும் அதில் சேர்ந்த அடுத்த வீட்டார் ஏற்படுத்தினாரா என்ற போது கட்சியும் பக்கத்திலுள்ளவர் தான் ஏற்படுத்தினார் என்பது உண்மை. இந்நிலை ஒரு தெருவில் மட்டுமன்று. ஒவ்வொரு வீட்டிலும், ஊரிலும் நாட்டிலும் மன ஸ்தாபம் இதே பிரச்சனை உருவாகி காணப்படுகிறது. நாட்டி லும் மக்களிலும் வேறுபாடு ஏற்படுத்தி விட்டு இதுதான் தீனு டைய வேலை என்று சொல்வது எப்பேர்பட்ட பொய்ப் பிரச் சாரம் என்பதை சொல்லவா வேண்டும். ஆகையால் முஸ்லிம் களைத் திருத்தும் நோக்கு விட்டுவிட்டு முஸ்லிம்களுடன் எதிர்ப்பு மனப்பான்மை உண்டாக்குவதற்கு பதிலாக தீனுக்காக அல்லாவிடம் தௌபா செய்து முஸ்லிம்களுடன் சேர்ந்து வாழும் படி பணிவுடன் கேட்டுக் கொள்கிறோம். அப்போதுதான் அருமை நாயகத்தின் (ஸல்) ஷபா அத்தும் கிட்டும். இல்லா விட்டால் அவர்கள் செய்வதெல்லாம் பித்னா என்னும் வீண் தூண்டுதலும் குழப்பமும் என்றே கருதப்படும்.

Scanned by CamScanner

4 நீங்கள் கற்றுக்கொள்ளும் கல்வியானதே மார்க்கம் எனக் கருதப்படும், ஆதலால் நீங்கள் யாரிடம் மார்க்க சட்ட திட்டக்களை கற்றுக்கொள்கிறீர்களோ அவர் எக்கொள்கை யுள்ளவர்கள் என்பதனை நன்கு ஆராய்ந்து தெரிந்து கொள் ளுங்கள் மாற்று கொள்கையுள்ளவர் என்று தெரிந்தால் அவரிடம் கல்வி பெறாதீர்கள், ரிவாயத்: பெரியார் தாபியா-இமாம் இப்னு. சிரீன் மிஷ்காத்

நபி நாயகம் (ஸல்) அவர்களின் நபீத்துவத்தின் பெருமை யினைப் பாருங்கள். கற்றுக்கொள்பவரைப் பற்றி சொல்ல வில்லை. கல்வி (தீன்)யைப்பற்றியும் சொல்லவில்லை கற்றுக் கொள்பவரைப்பற்றி மட்டும் சொல்கிறுர் என்றுல், நம்மை அவர்களை விட்டு காப்பாற்ற செய்த ஏற்பாடாகும் இது. இது ஒரு ஆழ்ந்த கருத்து. யாரிடத்தில் கல்விக் கற்றுக்கொள்ள வேண்டுமோ அந்த நபரை பரிசீலிக்கவும். சோதிக்கவும் அவசர படாமல் அவரைப்பற்றி நன்கு தெரிந்து கொள்ளவும் எச்சரித் துள்ளார். நாங்கள் யார் என்பதும் பரிசீலிக்க வேண்டாம். நம் கொள்கையை என்ன என்பதும் யோசிக்க வேண்டாம், நம் கொள்கையைப் பற்றியும் நாங்கள் கூறமாட்டோம். உன் கொள்கையைப்பற்றியும் நாங்கள் விவாதிக்க மாட்டோம், நீர் எங்களை ஏற்றுக்கொள், நாம் கற்றுக் கொடுப்போர்--உபாத்தி யாயர் நீர் மாணவன். ஆகையால் பரிசீலிக்கும் விஷயமே வேண்டியதில்லை. கலிமா. சொல்லிக் கொடுக்கவும் தொழவும் தானே கூப்பிடுகிறோம். இந்த உன்னத விஷயத்தை முன்னிட்டு நீர் நம் பக்கம் வந்துவிடுவதுதானே. வேறு ஆராய்ச்சி உனக்கு எதற்கு என்று யாவருக்கும் தெரியும்படி வெளிப்படையாக கூறுகிறுர்கள். இந்த தப்லீகர்கள் ரசூல் (ஸல்) நாயகமோ ஆராயத்தான் உத்திரவிடுகிறுர்கள் அதற்கு மாருக இவர்கள் ஆராய்வது அவசியம் இல்லை என்கிறுர்கள். நாம் யார் சொல்லை ஏற்றுக்கொள்ள கடமைப்பட்டுள்ளோம். யார் சொல் ஏற்றுக் கொள்ளவேண்டும் ?

நாம் நோன்பாளி, நம்மிடம் கசடு இருக்க முடியுமா, என்று தொழுகையையும் நோன்பையும் முன்னிட்டு முஸ்லிம் மக்களை தம் பக்கம் அழைக்கிறார்கள். பார்க்குமளவு இவருடைய சொல்லும் அழைப்பும் உண்மையாகவும், நல்லதாகவும் தான் தோன்றுகிறது. தொழுவதால் அவருக்கு குறையோ கசடோ இல்லை என்றிருக்க, சோதித்துவிட்டால் என்ன என்பதற்கு மட்டும் இவர்கள் இடம் கொடுப்பதில்லையே ஏன்? நோன்பையும் தொழுகையையும், முன்னிட்டு நபி (ஸல்) அவர்கள், சிலர் தொழுவதால் என்ன, நோன்பு நோற்றால் என்ன? அவ் வேலையை சிறப்பாக நினைத்து அவர்களுடையகொள்கையையும், நோக்கத்தையும் ஆராயாமல் இருக்க வேண்டாம் என வற்புறுத்தி அவருடைய மார்க்க பக்தியையும் மார்க்கப்பணியின் திரையையும் கிழித்தெறிந்து விட்டார்கள்.

நபி நாயகத்தின் உத்திரவிற்கிணங்க அவர்களை அலசிப் பார்த்தால் அவர்களுடைய கொள்கை மாறுபட்டதாகவும் ஏமாற்றும் எண்ணமும்தான் காணப்படும். அதை கண்டதும் ஜாக்கிரதை என்று உஷாரப்படுத்துகிறார்கள், தொழுகை. நோன்பு ஜக்காதினால் பின்னப்பட்ட அவ்வலையில் மாட்டிக் கொள்ளாதே. நீளமான ஹதீது வாயிலாகவும் விரைவில் புரிந்து கொள்ளவேண்டுமென சுருக்கமான ஹதீதுகள் மூலமும் எம் பெருமானார் (ஸல்) நம்மை (உம்மத்தை) இரு உலகத்திலும் காப்பாற்றுகிறார்கள். எம்பெருமானார் (ஸல்) அவரால்தான் நம்மை காப்பாற்ற முடியும். அவர்களைவிட்டு மற்ற யாராலும் எந்த இயக்கத்தாலும் நம்மை காப்பாற்றவே முடியாது.

இவர்களின் சூழ்ச்சி மிகுந்த நியத்தும் (எண்ணம்) மர்மமான கொள்கையும் தொல்லை கொடுக்கும் போக்கும் அவரால் ஏற்படும் கஷ்டங்களும் நபி நாயகம் (ஸல்) அவர்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெள்ளத் தெளிவாக தெரிந்து இருந்ததால் தப்லீகர்களுடைய அனேக அடையாளங்களை எடுத்துக்காட்டி நம்மைக் காப்பாற்றுகிறார்கள். தப்லீகர்களின் கொள்கை ஏன் நமக்கு மாறுபட்டதாக அமைந்து இருக்கிறது. அப்படியானால் அவர்களுடைய நோக்கம் வேறு என்பதைத் தான் நபி நாயகம் (ஸல்) அவர்கள் எடுத்தோதியுள்ளார்கள்.

Scanned by CamScanner

1) இது ஒரு அநியாயம் அல்லவா. இவ்வித நியாயமற்ற விஷயங்களை எல்லாம் நியாயமே என்று கூறுபவர்களும் எழுதுபவர்களும் இப்பொழுதாவது உண்மையை உணருவார்களா!

2) அனேக வியாபாரிகளும், மாணவர்களும் இந்த இயக்கத்தில் கலந்துகொண்டு அதன் காரணமாக தன் தொழிலையும் கல்வியையும் நாசப்படுத்தி கொள்கிறார்கள். அதனால் அவர் குடும்பத்தினர் தவிக்கும் நிலை ஏற்படுகிறது.

3) மார்க்கத்தை கற்றுக் கொடுக்க முனைந்த இவர்களுக்கு இந்த ஹதீதுகள் எல்லாம் தெரியவில்லையே, மற்றவர்களுக்கு கற்றுக் கொடுக்க இவருக்கு என்ன அந்தஸ்து உள்ளது.

4) உவைஸ்கற்னி என்ற பெரியார் வயதான தாயாரை அல்லாஹ் பார்த்துக்கொள்வான் என்று எண்ணி தப்லீகிற்காக ஏன் புறப்படவில்லை? என்ன அவருக்கு தீன் தெரியவில்லையா?

5) முழுக்க முழுக்க மார்க்கப்பணி செய்துகொண்டிருக்கிறவர்களுக்கும், அவ்வாறு செய்யவிடாமல் தம்கட்சியில்சேர்ந்து தான் ஆகவேண்டும் என்று வற்புறுத்துகிறார்கள். கட்சியில் சேர்ந்தபின் செய்வதை சேவை என்றும் இல்லாவிட்டால் தீன் சேவையல்ல என்று ஆலிம்களையும்கூட இகழ்கிறார்களே இது எந்த சட்டத்திற்குட்பட்டது.

6) மார்க்கம் காட்டிய நேர்வழி, இது தான்.

7) நமக்கு நம்முடைய முன்னோர்கள்தான் முன்மாதிரி நமக்கு அவர்கள் பொதுவானர்கள்.

8) அவருடைய ஈமான், அகீதா கொள்கைகளை கவனி, விசுவாசம், கொள்கை சரியில்லை என்றால் அவர் எவ்வளவு தொழுகையாக இருந்தாலும் அவரை விட்டு விடு என்று நம் அருமை நாயகமே [ஸல்] கூறுவதை கவனிப்பீர்களாக இயக்கத்

தாரின் விசுவாசம் அவர் கொள்கை எல்லாம் இருந்தால் நமக்கென்ன! அவர் பெரிய தொழுகையாளி. ஆதலால் அவரை நாம் ஏற்றுக்கொள்கிறோம் என்று திட்டவட்டமாக சொல்லி விட்டு அந்த இயக்கத்தில் சேர்ந்து நடமாடுவதை நாம் காண்கிறோம். அவர்களுடைய இந்தப் போக்கு நாயகம் [ஸல்] அவர்களுடைய உத்திரவை புறக்கணிப்பதுபோல் ஆகவில்லையா! ஹதீதும் தெளிவாக இருக்கிறது. பெரும் பெரும் உலமாக்களும் அவற்றை விவரித்து வருகிறார்கள். மறுபடியும் அதே நிலை என்றால் அந்நிலையில் உள்ளவர்கள் தீனிலிருந்து மறைமுகமாக விலகுவதை அவர்களால் ஏன் கண்டுகொள்ள முடியவில்லை. அந்தோ! பரிதாபம்! டில்லிக்காரர் ரஸூலே கரீம் [ஸல்] அவர்களை தழுவிப் பிடிப்பதற்கு பதிலாக ரஸூலேகரீம் [ஸல்] அவர்களை விட்டு விலகும்படியும் செய்து மதிக்காத கூட்டத்தார்களில் சேரும்படியும் மாற்றி விடுகிறார்கள்.

இதற்குப் பிறகு மற்ற மேதை சங்கை மிகு ஆலிம்களின் தீர்ப்புகளும், குர்ஆன் ஆயத்துகள் மூலமாக அந்த தப்லிக் ஜமாத் இயக்கத்தின் கேடுகளைப்பற்றிய விபரமும், மேலும், தப்லீகின் பெரிய பெரிய மௌலானாக்கள் தான் அனுபவப்பட்ட பின் அதனுடைய குறைகளை எடுத்துக் கூறுவதையும் இன்ஷா அல்லாஹ் வெளியிடுவோம். எதிர்பாருங்கள்.

புனித ஹதீதுகளின் கருத்துப்படியும், மக்களை தீமையில் இருந்து காப்பாற்றும் நன்னோக்குடன் அல்லாவிற்காகவே வெளியிட்ட விளக்கப்படியும் அதில் சேரவிடாமல் தடுப்பதும் சேர்ந்தவர்களை அதிலிருந்து மீட்பதும் மாபெரும் புண்ணியமாகும், தீய வாதிகளின் தீமையை மேலும் அறிய விரும்புவோர் திருச்சி மறுமலர்ச்சி வார இதழ் 15—1—60-வதிலும் வேலூர் பாக்கியாத்துஸ்ஸாலிஹாத் மதரஸாவிலிருந்து வெளியிடப்பட்ட 'தப்லீக் வாலாவின் அட்டகாசம்' என்றபிரசுரத்தை பாருங்கள். நம்மிடமும் கிடைக்கும்.

இதற்கு ஆதாரமாக கீழ்க்கண்ட பிரசுரங்களையும் பார்க்கலாம்.

1) ஹலரத் மௌலதுல்அலம் (ரலி) அவர்களின் வஸீலாத் தொழுகையும் 11ம் பாத்திஹாவும்,
—by M. S. E. முஹம்மதலி,
பிரசுரிப்பவர் : பேரொளி பப்ளிஷர்ஸ், நாகூர்-611002

2) தப்லீகும் அதன் தலைவர்களும்,
—by மௌல்வி ஹாபிஸ் M. S. அப்துல்காதிர் பாக்கவி,
பிரசுரிப்பவர் : சன்மார்க்க ஊழியர்கள், பாடி, சென்னை-600050

3) தப்லீகு என்றால் என்ன ?
—by மௌல்வி ஷெய்கு அப்துல் காதிர்,
ஸூபி காஹிரி பிரசுரிப்பவர் ஹிஸ்புல்லா சபை, காயல்பட்டினம்

4) தப்லீக் ஜமாஅத்தைபற்றி.
by N. அஹமத் ஹாஜி,
கோர்ரப்புடி P. O. கேரளா.

5) ஹிதாயத்துல் அனும் —இலா ஜியாரத்தில் அவ்லியா இல் கிரும்
சன்மார்க்கம் பதிப்பகம். K. T. M. தெரு,
காயல்பட்டினம்-628204

Scanned by CamScanner

